உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருவிடைமருதூர்க்கலம்பகம்.

இது

திரு எவ்வுளூர்

இராமசாமி செட்டியாரவர்கள்

இயற்றியது.



காஞ்சீபுரம்

வேதகிரிமுதலியார்குமாரர்

இரத்தினமுதலியாரவர்களால்

சென்னை:

கலாரத்நாகர அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1900.

இதன்விலை அணு - 2.

# பொருளடக்கம்.




| | | |
|---|---|---|
| | | பக்கம். |
| i. | சிறப்புக்கவிகள் ... ... | ௩. |
| ii. | திருவிடைமருதூர்க்கலம்பகம் ... | ௭. |
| | 1. கடவுள்வாழ்த்து ... ... | ௭. |
| | 2. அவையடக்கம் ... ... | ௮. |
| | 3. நூல் ... ... . | ௯. |
| iii. | கலம்பகப் பாட்டியல் ... ... | ௪௧. |
| iv. | இக்கலம்பக வுறுப்பகராதி ... | ௪௨. |
| v. | செய்யுண் முதற்குறிப்பகராதி ... | ௪௫. |




# சிறப்புக்கவிகள்.



சென்னைக் கிறித்தவக்கலாசாலைத்
தலைமைத் தமிழ்ப்பண்டிதர் பிரமஸ்ரீ
## வி. கோ. சூரியநாராயணசாஸ்திரியார். பி. ஏ.
சொல்லிய
கட்டளைக்கலித்துறை.

பாட்டிய லோடு துறைப்பொருள் பெய்குபு பார்ப்பவர்கட்
கேட்டகந் தோறு மணக்க விடைமரு தீசருக்கு
நாட்ட முடனே கலம்பக மென்னு நறுங்கலவை
சூட்டி யணிந்தான் குணராம சாமிக் குரிசினன்றே.



வித்வான்,
## கா. இராமசாமிநாயுடு அவர்கள்
சொல்லிய
எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

நிலம்புகழ் நெடுஞ்சீர் நிறையிடை மருதூர்
நின்மல னீரசத் தாட்கோர்
கலம்பகத் தொடையல் கவினுறப் புனைந்திக்
கடும்பவங் களைந்தனன் வணிகர்
குலம்புனை கோமான் கொடைப்புய லெவ்வுட்
குரிசில்கோ தறுகலைப் பொருள்சேர்
நலம்பெறு மனத்தெம் மிராமசா மிப்பேர்
நரேந்திர னுவல ரேறே.



வித்வான்,

## திருமயிலை. சண்முகம்பிள்ளையவர்கள்

சொல்லிய

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

தனைப்புரிவிற் பூசனைசெய் திறங்காட்டுங் தனிமருத
வாண னூர்க்கு
மனப்பரிவி னலத்தசெழுந் தமிழ்க்கலம்ப கத்தெரியல்
வனைதல் செய்தான்
புனச்சிறுமி மணமகற்கு மாமடிக ளுறையெவ்வுட்
புரத்தி ளங்கோ
வினக்குரிசி லென்வயினண் புறுராம சாமியா
மியல்வல் லோனே.

---

யாழ்ப்பாணத்துச்சுன்னுகம்

## அ. குமாரசுவாமிப்புலவரவர்கள்

சொல்லிய

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

பூமேவுஞ் சோணாட்டி விடைமருதூ ரெனப்பலரும்
புகழா நின்ற
தேமேவு நகரமிசை வீற்றிருக்கு மகாலிங்க
தேவ னுக்கு
நாமேவு மிசைநலனும் பொருணலனுஞ் சொன்னலனு
நயந்து மேவப்
பாமேவு கலம்பகப்பேர்ப் பிரபந்தத் தனிமாலை
பண்பு வாய்ப்ப.

பாடியினி தணிந்தனனுற் றிருவெவ்வுள் வசியர்பரம்
பரையோன் கல்வி
தேடியுணர் கவிப்புலவன் சித்திரமும் பிறகவியுஞ்
செய்வோன் கொன்றை
சூடியடி யார்க்கடியன் சிறுத்தொண்டர் கீர்த்தனையுந்
துலங்க வைத்தோன்
பீடியலுங் குணராம சாமியெனும் பெயர்பெற்ற
பெரியன் மாதோ.

---

வடுவூர் - அஷ்டாவதானி

## அரங்கசாமி ஐயங்காரவர்கள்

சொல்லிய

### அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

சிலம்பகமே வியகுகனைத் தருதாதை யிடைமருதூர்ச்
செல்வன் முட்குக்
கலம்பகமாம் பிரபந்தங் கட்டுரைத்து விளங்குபெருங்
கருணை பெற்று
னலம்பகமா மணிகளொளிர் பணிசேரெவ் வுட்பதிக்க
ணவத ரித்துத்
தலம்பகருங் கனமோங்குஞ் செயராம சாமியெனுந்
தமிழ்வல் லோனே.

---

திருமழிசை - கந்தசாமிமுதலியார் குமாரரும்

சொர்க்கபுரம்

இராமலிங்கத்தம்பிரானவர்கள் மாணுக்கருமாகிய

## வடிவேலு முதலியாரவர்கள்

சொல்லிய

### எண்சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

சோலம்பகமா ரிணைமணியாக் கவிஞர் கொள்ளச்
சொற்சுவைகள் பற்பலவுந் தொகுபி லங்க
விலம்பகமா வரவிதழி யாரெ ருக்கென்
பிளம்பிறையு மூர்தியுண வேறெ டாலா
விலம்பகமா மலைமாலொண் கயிலை கொண்டு
விழையுமெழி லிடைமருதூர் வித்த கர்க்குக்
கலம்பகமா மாலையினி தணிர்தா னெவ்வுட்
கனராம சாமியெனுங் கவிஞ ரேறே.



758

உ

சிவமயம்.

# திருவிடைமருதூர்க் கலம்பகம்.

## கடவுள்வாழ்த்து.

### விநாயகர்காப்பு.

நேரிசை வெண்பா.

சீரா ரிடைமருதூர்த் தேவர்மகா லிங்கர்தம்மேற்
பேரார் கலம்பகநான் பேசுதற்கு - நாரார்சொற்
முராண்ட பாத சரோருகங்காட் டித்துணையாம்
பாராண்ட யானை பரிந்து.

### சமயாசாரியர் நால்வர் துதி.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பெண்ணிடத்தன் றண்ணருளி னென்புபெண்ணாக் கியபுகலிப்
பிள்ளை யாரோர்
பெண்ணினுயர் தமக்கைநவி னெறியாற்பே றுறுமாமூர்ப்
பெரிய ராரூர்ப்
பெண்ணினிடத் தவ்வரனைத் தூதேவு நாவலூர்ப்
பிரிய ருமைப்
பெண்ணினைமுன் பேசுவித்த வாதவூ ரடிகளடி
பேணி வாழ்வாம்,

## பட்டினத்தார் துதி.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மணிக்கோவை யணியுமைசே ரிடைமருத் வாணர்தம்மேன்
மலைத்தே னூரன்
மணிக்கோவை யுணுஞ்சுரபி யின்பாலோ வீதெனமா
மதுரச் சொன்மும்
மணிக்கோவை யெனும்வளங்கொள் பிரபந்தஞ் சாற்றியருள்
வாய்ந்த ஞான
மணிக்கோவை யிசைசெய்புகார்ப் பட்டினத்தெ மடிகளையாம்
வழுத்தல் செய்வாம்.

---

## அவையடக்கம்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

புகல்விட மமுதாக் கொண்ட புனிதனூர் மருதர் மீதிற்
ககனர்சொல் குணங்க ணுடிக் கலம்பக மியம்ப லுற்றேன்
றகுதியற் றிருப்ப தேனுந் தந்தையர் சிறார்சொன் மெய்ச்சவ்
வகையென விறைசீ ரீதின் மருவலான் மகிழ்வர் மேலோர்.



# நூ ல்.

## மயங்கிசைக்கொச்சகக்கலிப்பா.

பூமேவு திசைமுகனும் பொறிவிளங்கு மார்பகனுங்
காமேவு மிந்திரனுங் ககனர்களும் பணிந்திறைஞ்ச
விஞ்சையரோண் கந்தருவர் வியன்கொள்கவி யிசைபாடச்
செஞ்சந்த மனுமறைக டிகழ்தருநல் லொலிநீட
வெஞ்ஞான்று முலகுரைக்கு மின்பவள மிகுக்காட்டுஞ்
செஞ்ஞாயிற் றினைநிகர்த்த சீர்ச்சோழ வளநாட்டிற்
கோதிலாக் கரிக்கோடுங் குங்குமத்தின் செழுஞ்சினையுங்
காதியெடுத் தெறிந்தியல்செய் காவிரிமா நதித்தென்பாற்
பொற்பாரும் பலமடமும் பூந்தடமுஞ் சோலைகளுங்
கற்பார்க ளுறையிடமுங் கண்டன்ன தானமுதற்
பேரறஞ்செ யிடைமருதப் பெரும்பதிக்கட் பெருமுலைப்பேர்க்
காரிகையி னுடன்விளங்குங் கனமருத நாயககேள்.

(இது பன்னிரண்டடித்தரவு.)

சேல்விழைந்த கண்ணுளோண் செல்வமுறு திருத்தாயின்
பால்விழைந்த பாலகற்குப் பாற்கடல்பா லித்தனையே!

வாயிலிருந் தோர்பொய்மொழி வழங்கினர்க்கு நரகென்று
யாய்மருவித் தாதைகொன்றோ னவன்பாவம் போக்கினையே!

வரமூன்று மமரரெலா மயங்காது நிலைபெறவப்
புரமூன்றும் பொடியாகப் புன்னகையா லெரித்தனையே!

ஏர்பரவு நால்வேதத் தினியபொருள் கண்டிடுநீ
சீர்பரவு மூவர்தமிழ் திருச்செவிக்க ணேற்றனையே!

ஏழைமைநீத் தெங்கெங்கு மிடமிருக்க நீவீர
சோழனியற் றாலயமே சொந்தமெனக் கொண்டனையே!

பேராயி ரம்பெறுமெம் பெருமானின் விளையாட
லோராயி ரங்நாவி னுரகரசுஞ் சொலற்பாற்றோ?

(இவை ஆறும் ஈரடித்தாழிசைகள்.)

கடமழை பொழிதரு கரியின தடல்கெட
வுடையென வணிதரு முயரொரு வடிவினை;

தடையற வெலியொரு தனியர சுறவருள்
கொடையினி லிசைபெறு குணமுள மகிமையை;

கடிகம ழிதழிபுல் கதிர்மதி நதிபணி
சடைமிசை வனைநனி சதிர்திகழ் பெருமையை;

குடமுனி முதலிய குலமுனி வரர்தொழும்
வடதிசை யுயர்முடி மருவிய கயிலையை;

(இவைநான்கும் ஈரடியராகம்.)

அண்டமுண்ட விண்டாதி யமரர்தம தெணம்வாய்ப்பக்
கண்டர்ச்சிப் பார்கினைநீ கண்டர்ச்சித் திட்டதென்னே!

திடம்பெறுநற் பொன்மலைக்குச் சீர்மருக வந்திநலாள்
சுடேம்பிட்டுன் டொருமுடிமேற் சுமந்தாய்மண் ணிதுநன்றே!

வாழ்த்துறுமெய் மிக்ககதி வயங்குமறைப் பரியிருக்கக்
காழ்த்திருமால் வாகனமாக் கருத்ததனிற் கொண்டதென்னே!

ஏராளக் கிருபையுள்ளா யெனவேத மிசைத்திடநீ
சீராள னெனுமகவைத் தினவிழைந்த ததிசயமே!

(இவைநான்கும் பெயர்த்தும்வந்த ஈரடித்தாழிசைகள்.)

வேத னரிச்சிர மாலை பரித்தனை
மேலவர் கைப்பற நீதி தெரித்தனை
சூது நரிப்பரி யாக விடுத்தனை
தோமறு பொற்பொது மேவி நடித்தனை.

(இவைநான்கும் நாற்சீரோரடி அம்போதரங்கம்.)

அரும றைக்கு ரியைநீ; யமர ருக்கி றைவனீ
திருவ ருட்கு ரவனீ; செகமுவப்ப வனுநீ.

(இவைநான்கும் முச்சீரோரடிஅம்போதரங்கம்.)

சுருதி சொற்றனே; மருதி லுற்றனே
சுகம்வி ளைத்தனே; நகம்வ ளைத்தனே
யருணி றைத்தனே; யிருளொ றுத்தனே
யாறு சூடினே; யேறு நாடினே.

(இவையெட்டும் இருசீரோரடி அம்போதரங்கம்.)

என வாங்கு.

(இது தனிச்சொல்.)

தினமுமெய் யன்பர்கள் சிந்தித் திறைஞ்சு
மனக புராதன வாரண விசேட
வலனுயர் மழுமான் மருவுகைத் தலத்த
புலியத ளுடுத்த புங்கவ புனித
வொருவிடைக் கொடிகொண் டோங்குறும் வித்தக
திருவிடை மருதூர்த் திருத்தல நாத
வன்றீ வினைகள் வலியழிந் தொழியநின்
றன்பூங் கழலிணை தகுமெனு ணிறுத்தி
யடிமையின் குறைதீர்த் தருள்செய்நின் னன்பர்பாற்
றிடமுறச் சேர்ந்துநற் சீருறும் பொருட்டே.

(இஃதாசிரியச்சுரிதகம்-) (க)

நேரிசைவெண்பா.

சீருறுநாற் கோட்டுத் திறலத்தி யூரரசுந்
தீரமுற மாகஞ் செழித்துயவே—சூரைச்
சினக்கும்வடி வேற்கரன்பூ சிக்குமரு தீசன்
றனைக்கருத லேமெய்த் தவம். (உ)

கட்டளைக்கலித்துறை.

தவத்தினர் யார்க்கு நிலைபர மாநிதந் தான்றுதிப்பார்
பவத்துய ரக்கடற் கோர்வங்க மாமிக்க பத்தர்செஞ்சொற்
சுவைத்திருப் பாடலின் றேன்கொள்ள வண்சுரும் பாமெனிரு
ளவித்தைக்கு ஞானச் சுடரா மருதா ளுர்சரணே. (ந)

## புயவகுப்பு.

### ஆசிரியவண்ணவிருத்தம்.

#### குழிப்பு.

தனதன தனதன தானந்த னுதன
தனதன தனதன தானத் தனந்தன.

சாதம தமையுமை மாதங்க மாமுலை
சமர்செய வடுவொடு மேருற் றுயர்ந்தன
சடுதியி லொருவல மேவந்த காரணர்
சருவிய கனியுண வீதற் குவந்தன
சதுர்மிகு தருமம தேயென்றும் வாழதி
சயவர மிசையுற வாளத் திகழ்ந்தன
சகுணமு நியமமு மேவந்த னுளர்கள்
சரணம தடைநிலை காணப் புரிந்தன

கருநிற மதனன்வி லேறுண்ட நாணிசை
கடிகம ழிதழியொர் தாரைப் புனைந்தன
கதமொடு பொருதிட நேர்நின்ற மாவுரி
கணமதி லணிபெற வாகத் தணிந்தன
கவினணு மரியவி னோதஞ்செய் மோகினி
கலவியின் வகைகொள வாவிப் புணர்ந்தன
கவுணியர் குலமணி தானுந்து தாளம்வி
கசிதசி விகையுட னேலக் கிளர்ந்தன

பரவுசொ லரையர நாள்கொண்ட நீடிய
பசியில கிடும்வகை சோறிட் டிசைந்தன
பகரரு மெமதடி தூழ்சுந்த்ர னீயிது
படியென வவிர்முறி கோடற் சிறந்தன
பலனரு ளணிமணி யார்துங்க வாசகர்
பகர்பனு வல்கள்வரை யாமுற் சிவந்தன
பதிவர குணன்மனை யாணங்கை மாகதி
படியவொன் விரல்கொடு தாவிச் செறிந்தன

திரமலி மதுரையி னோர்வந்தி மாதவ
டினுமுண வினியவை யீயக் கவர்ந்தன
திறன்மறை யனுதின மோதெண்க ணுனெழி
நிகழ்நடு முடிபறி யேர்பைப் பொருந்தின
திரியுரன் விழிபத மேறும்பொ தோர்வரு
திகிரியெ னதுபிர சாதித் தமர்ந்தன
திருவிடை மருதர்ம காலிங்க நாயகர்
திடமரு வியவுயர் வாகைப் புயங்களே. (ச)

## நேரிசைவெண்பா.

புயங்கமுனி ஞானப் புலிக்கான் முனியொண்
புயங்கமணி நாதவெனப் போற்றப் - புயங்க
மசையப் பொதுநடித்த வையா மருதா
விசைநடஞ்செ யென்னு ளிசைந்து. (ரு)

## கலிச்சந்தவிருத்தம்.

இசைநேர்தவ முனிவோர்விடு மிகன்மானதொர் கரமேல்
வசமாகிட வுளமேசெயு மருதீசவவ் வுழைதான்
பசிதீரமெ லறுகார்புனல் பகர்நீள்சடை யுறநீ
பிசகாதுகொ டவையாளுதல் பெருமானெனும் வளமே. (சு)

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வளங்குலவு மெய்ப்பொருள்வேண் டினுந்தருஞ்சிந் தாமணியே
வழுத்து மேன்மை
விளங்குசிலப் பதிகார மேவ்மவா னின்றமணி
மேக லைச்சீர்
கொளுங்கையிடை மான்சொல்விழை செவியராக் குண்டலகே
சிக்கோ வேநற்
றௌங்கண்மா ஞாலப்பெ ணணிவளையா பதிமருதூர்த்
தேவே போற்றி. (எ)

## நாரைவிடுதூது.

### கலி நிலைத் துறை.

தேவர்க டேவன் மாமரு தீசன் செவியூடே
பூவியன் மாது மோகம்வி சேடம் புணர்வாயென்
ருேவலி லாமற் போயுரை நீயே யுபகாரி
வாவியுண் மேவிம ஞேரத மார்கோ மடநாராய். (அ)

### ஆசிரியத்தாழிசை.

மடமை செறிதருமென் மைம்மனப் பீடிகைமே
விடாஅற மாதோடு மெய்திஞ னின்னருள்செய்
திடைமரு தீச னெனுமெழிற்கோ பாலனே. (கூ)

### ஒருவிகற்பநேரிசைவெண்பா.

கோபால னஞ்செய்த கொள்கையாற் சீதரனைக்
கோபால னென்றுலகர் கூறுவராற் - கோபாலக்
கோபால னென்றுனையான் கூறுவேன் வண்மருத
கோபா லனமெய்யுட் கொண்டு. (க0)

## நெஞ்சுவிடுதூது.

### வேற்றொலிவெண்டுறை.

கொண்டலெனக் கருணைமழை பொழிந்தன்பர் தமையென்றுங் குணமாக் காக்கு
மண்டர்பிரா னிடைமருதர் நம்புமெளி யாண்மட்டி லன்பு நீத்தா
ரைங்கணைக் கிழவஞே டவன்குடைத் திங்களும்
பொங்கொலிப் பேரிகைப் பொருதிரைப் புணரியு
மங்களத் தேரென வயங்கிளந் தென்றலு
மிங்கெனைச் செய்திடு மிணையிலாக் கொடுமையைத்
துங்கமார் நெஞ்சமே சொல்லவும் வேண்டுமோ
வங்கவ ரிடஞ்சென் றனைத்தையு மோதி
வங்கணம் பெருக மலர்க்கழ லிறைஞ்சியே

தங்கித ழித்தார் தரக்கொணர் குவையே
லங்கண்மா ஞாலத் தடையலாஞ் சுகமே. (கக)

நேரிசைவெண்பா.

சும்மாவி ருந்தவெனைத் தூண்டிநினைப் பாட
வம்மாநீ செய்த ததிசயமே - வெம்மாயை
யோட்டியரு டென்மருதா ருத்தமா வுள்ளங்கொண்
டாட்டிவைத்தா லாடாதா ரார். (கஉ)

கட்டளைக்கலித்துறை.

ஆடச்செய் வானு மசையச்செய் வானுமெய் யன்புளத்திற்
கூடச்செய் வானுங் கொழிக்கச்செய் வானுங்கை கூப்புநரை
நீடச்செய் வானு நிலைக்கச்செய் வானுநா னின்றுதனைப்
பாடச்செய் வானு மிடைமரு தூரிற்க பாலனன்றே. (கங)

அன்னவிடுதூது.

கட்டளைக்கலித்துறை.

பாலொடு சேர்ந்துறு நீர்பிரித் தச்சுவைப் பாலுணுஞ்சீர்ச்
சாலு மதிகொண் மடவன்ன மேயென் றலைவர்முன்சொல்
காலமுந் தாழ்க்த திடைமரு தூரினிற் காண்குவையென்
றேல வழைத்துவந் தான்மற வேனின் னியற்பெயரே. (கச)

நேரிசைவெண்பா.

இயலாதி முத்தமிழ்தேர்ந் தேத்துவெண்கா டர்க்காச்
செயிரார் கழுவெரியச் செய்தாய் - வெயிலார
லிந்தாகு முக்க ணிறைவா விடைமருதா
வந்தாண் டருள்புரிகு வாய். (கரு)

கொச்சகக்கலிப்பா.

வாயுதித்த செஞ்சொன் மணிவாச கர்க்காகத்
தாயுதித்த வன்போ தலைமீது மண்சுமந்தாய்
நாயுதித்த பெண்ணி னவைதீர்த்துப் பேறளித்த
வேயுதித்த முத்தே வியன்மருத விண்ணவனே. (கசு)

அம்மானை.

கலித்தாழிசை.

விண்கொண்ட தேவர்நிதம் வேண்டுமரு தூர்ப்புனிதர்
பெண்கொண்ட வாயரெனப் பேர்கொண்டா ரம்மானை
பெண்கொண்ட வாயரெனப் பேர்கொண்டா ராமாகிற்
கண்கொண்டு பார்க்கவும்பெண் காட்டுவரோ வம்மானை
காட்டுவார் வாய்ப்பெணுளக் கண்பெற்றூர்க் கம்மானை. (கஎ)

நேரிசைவெண்பா.

மானுக் கிடந்தருமோர் வானம் புலிக்கிடந்தன்
கானக் கவின்சடிலங் காட்டியே - ஞானக்கண்
பெற்றபுலிக் குட்டிக்குப் பேரமுத வாரியளித்
தற்றமரு தீசனையு ளோது. (கஅ)

ப ள்.

பெருந்தாழிசை.

ஓதொ ரிந்துகற் பரிதி யாரன
லொளிரு முக்கணுக் கொண்டவ
னுளத்தின் வருத்த மகல வொருவர்க்
குலவாக் கோட்டை யளித்தவன்
போதா ரொண்முகத் துமைக்கிடந் தந்து
புகழ்கொண் மருத வானவன்
புனித மாமலை யருவி யாமநீர்
பொதுளிப் பாயுந்தண் வயலிலே
வாதார் களமர் மிகவுங் களித்து
மைய லுற்றுவந் துறைதலான்
மதர்த்த வசன முரைத்துச் சரச
வகையிற் பொழுது போக்குவீர்
சூதார் பெரிய முலைகள் குலுங்கத்
தொகுத்த கூந்தல் சரிந்திடத்
தொடர்ந்து நிமிர்ந்து நாற்றை யெடுத்துச்
சுருக்காய் நடுமின் பள்ளீரே. (கக)

## கட்டளைக்கலித்துறை.

பள்ளக் கரும்பௌவப் பார்சொல் வரகுண பாண்டியனைக்
கொள்ளும் பெரும்பழிப் பேய்நீக்கி யாண்ட குணமருத
வள்ளனின் கோயில் வலஞ்செய்து வாழ்த்தி வணங்குவதற்
கொள்ளுங் கடைக்கண் செயாவிடி லெவ்வித மோங்குவனே.

க ளி.

## எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஓங்களிய ரென்னுமிடை மருத வாண
ருபயபத மலர்களைத்தா முள்ளே கொள்ளும்
பூங்களியேங் கதிர்கடிசை மாறி னாலும்
பொய்யுரையே மெய்ம்மொழியே புகல்வோ மப்பா
கோங்களிசூழ் பொங்கர்திருப் பனந்தா ளின்கட்
குடியேறி யரன்சடைய னெனப்பேர் தாங்கத்
தாங்களினு லின்புறமா லயன்பி னேகிச்
சாற்றரிமுண் டகனெனப்பேர் தாங்கி னாரே. (உக)

இதுவுமது.

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தூங்குநெடுங் கடலுண்ட முனிபரவு மிடைமருதூர்த்
தலத்தை நாடுந்
தீங்கிலாக் களியேமெவ் வளவுகுடிக் கினுமயக்கஞ்
சேர்வ தில்லை
பாங்குபெறு வைகுந்தஞ் செவ்வேடன் காத்துமிசை
பரவுஞ் சொர்க்க
மோங்குமட மாதர்கட மார்பினிலுங் கண்டிடலா
முண்மை தானே. (உஉ)

## விருத்தக்கலித்துறை.

ஞானம தணுவள வாயினுஞ் செயவுளிற் றையாது
கானக மதனிடை மாதவ முயலவுங் கைப்பேனன்

மேனிலை யுறுவதெவ் வாறுயர் புலவர்சொல் வெற்பார்செந்
தேனெனு மொருகனி பாலுறை சுமருத திக்காரே. (உ௩)

மதங்கியார்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தீக்கயமு முட்கமுலைக் கோடு காட்டித்
திகழும்வளை நூபுரங்கள் கரங்கான் மேவ
மிக்கவிழி வாள்வீசிப் பெருந்த வத்து
மேலோரு மயக்கவிரு கைவா ளேந்தித்
தொக்கதோ வெனப்பூரமர் மருதூர் தன்னிற்
றேமறவே விளையாடு மதங்கி யாரே
யெக்களிப்போ டெவ்வாள்கூ ரெஞ்செ விப்பா
லேற்கும்வகை மொழிக்கரும்பா லியம்பு வீரே.(உ௪)

தவம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வீரமுறும் புலியாதி விலங்கினஞ்சூழ் கான்மலைக்கண்
மேவி நாளுங்
கோரமுறுந் தவம்புரியுங் கொள்கைகொண்டீர் துயரமன்றிக்
குணங்கண் டீரோ
வீரமுறும் வயன்மருதூ ரணைந்திறைவன் மலர்ப்பதநீ
ரிறைஞ் சு கிற்கி
ஞாமுறும் பலபதமும் பெற்றந்த மேற்கதியு
மடைகு வீரே. (உ௫)

தலைவிபுள்ளோடுகிளத்தல்.

கொச்சகக்கலிப்பா.

அடைவுபெறுங் கோகிலங்கா ளன்னங்கா ளொண்கிளிகாள்
மடமயில்கா டேனுண்ணும் வண்டுகாள் புள்ளினங்கா
டிடமருதூர் தனினம்பச் செப்பியே நீத்தவென்ற
னுடையனூர் சென்றவழி யுளமுவந்து காட்டீரே. (உ௬)

## நேரிசைவெண்பா.

காட்டுமால் செங்கோ கனகக்கண் டங்குநின்றுட்
பாட்டினுல் வாழ்த்திப் பணிந்திடவு—ணுட்ட
மளித்தெளியன் புன்மைதவிர்த் தாண்மருத வாணு
தெளித்தெளியும் வண்ணந் திகழ்ந்து. (உஎ)

## ஐயந்தேளிதல்.

## மருட்பா.

வண்ணவொண் வாரிசம் வைகுதலாற் கண்டே
னிடைமரு தூர்திரி யிசைவண் டினங்கா
ளிடைமரு தூருறை யேந்திழை மாதே. (உஅ)

## விறைவுத்தரம்.

## நேரிசைவெண்பா.

மாதர்முலை கட்டுவது மன்மதன்கை வில்லதுவு
நீதிபல ராம னெடும்படையு—மேதினியோர்
மெய்ச்சிக்கொண் டாடுவது மெய்யமரு தூர்த்தலைவா
கச்சிக்க லம்பகமாங் காண். (உகூ)

## ச ம் பி ர த ம்.

## பன்னிருசீர்க்

## கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

காணுமண் டங்கள்பல சேர்த்தொரு கணத்திற்
கலங்கக்கை யாற்றகர்ப்போங்
கானிலுறு வேங்கையைச் சுட்டுவெங் கரியதாக்
கரியெவர்க் குங்காட்டுவோஞ்
சேணினிற் காலைமலர் பூவலரி மாலையிற்
றெரியா தொளித்துவிடுவோந்
திகழ்வுறு மரம்பையை நிலத்துநின் றுடிடத்
தேர்ந்துபல மேறவைப்போம்

வீணுரு துறைநீர்க் குளத்திற் குளங்கொண்டு
விட்டற் புதம்புரிகுவோம்
வேழமொரு கையினல் வேழங்கள் பலகொண்டு
விழைவொடுன் ணச்செய்குவோம்
பேணுமம் புலியின்கண் முயல்காட்டு வோமீது
பெரிதான வித்தையன்றும்
பிறங்குமா லயன்முனங் காணொணு மருதப்
பிரானைநாம் காண்பிப்பமே. (௩0)

## கலிவிருத்தம்.

பின்னி டாதுமார்க் கண்டப் பெருமுனி
தன்னை யாண்ட தகுமரு தூரரா
நின்னை யேத்தி நிதம்பணி வோர்களை
யன்ன காலன்வந் தண்டிடா னுண்மையே. (௩க)

## குறள்வெண்பா.

உண்மைஞா னம்புகழ்சீ ருற்ற வெலாமெமக்குத்
தன்மருத னெண்கஞ்சத் தாள். (௩உ)

## ஊர்.—சிலேடை.

## நேரிசைவெண்பா.

கஞ்சமுக மின்னூர் கருங்குழலும் பாவலரு
மஞ்சரிகாட் டுஞ்சீர் மருதூரே—விஞ்சுறுநால்
வேதங்கத் தான்ற வியன்சிலம்பு பூண்டமலை
மாதங்கத் தான்றனது வாழ்வு. (௩௩)

## இன்னிசைச்சிந்தியல்வெண்பா.

வாழ்த்துமின் வாழ்த்துமின் வாழ்த்துமின் வாழ்த்துமின்
பாழ்த்த பிறப்பறுத்தாள் பான்மைமரு தீசன்செங்
கேழ்த்தன் சரணமலர்க் கீழ். (௩௪)

## தழை.

### கட்டளைக்கலித்துறை.

மலய முனிக்கா வமரு மருத வனன்றன்வெற்பி
லுலகம் புகழ்திரு வாள்வாட் கயற்கண்ணி லொற்றிக்குழற்
றலைதரித் தம்மக் களபங் களபந் தழைதழையென்
றிலகுரஞ் சேர்த்துக் களிப்புற் றனளெம் மிறையவனே. (நரு)

### குறள்வெண்செந்துறை.

வனதடா கத்துநீர் வன்கலை மாற்றுநூல்
பனுமரு திறையருள் பவநோய் மாற்றுமே. (நசு)

### நேரிசைவெண்பா.

மாற்றுயர்ந்த பொன்னே மருத நகர்க்கிறையே
போற்றலுறு மெய்ஞ்ஞான பூர்ணமே - சாற்றரிய
வித்தகமே யோக விளக்கேயென் பாரிடத்து
மெத்தவும்வைப் பான்பிரிய மே. (நஎ)

## குறம்.

### எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பிரியமுடன் றரைமெழுகிக் கோல மிட்டுப்
பிள்ளையார் பிடித்துவைத்துக் கிழக்கு நோக்கி
யிருநின்கை முகம்பார்த்துக் குறிகள் சொல்வே
னென்குறிமெய்க் குறியெவர்க்கு மினிமை காட்டுஞ்
சுரர்கள்குறை தீர்த்தாண்ட மருதர் பொற்ற
டுதித்திடுந்தெய் வக்குறத்தி யான்சொ லுஞ்சொன்
மருவுகுறிக் கிருநாழி நெல்லுந் தூசும்
வண்பணமு மென்முன்னே வைப்பாய் மின்னே. (நஅ)

## இதுவுமது.

மின்னுமுடி யரசருமென் குறிய றிந்தான்
மெய்ச்சுறுபொற் பணம்பெற்ற குறியென் றுங்கே
தன்னியம முற்றக்கை யாடிக் கோடி
தனந்தந்து வணங்குவர்பொய் வார்த்தை யல்ல

மன்னுநய வார்த்தையின்றி விகடம் பேசி
வம்பளப்போ ரிடம்வம்புத் தனங்காண் பிப்பேன்
பன்னுமிடை மருதூரி னிடத்தெப் போதும்
பழமையாய் வருங்குறத்தி படியில் யானே. (௩௯)

## இடைச்சியார்.

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

படிப்பா லுயர்ந்த புலவர்நிதம்
பரவும் பெருமா மூலையெனும்பைங்
கொடிப்பான் மருவப் பசுபதியாங்
குலகற் பகம்வாழ் மருதூர்க்கட்
குடிப்பா லெனவே யதிகவிலை
கூறி விற்கு மிடைச்சியர்நும்
மடிப்பான் மேலார் குடப்பாலுங்
மகிழ்வாய்த் தரினும் வாங்குவமே. (௪0)

## சித்து.

### எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மேதகுநன் மருதவனப் பெருமா னூர்த
மிக்கருளான் மகிமைதிகழ் பெரிய சித்த
நாதரெனப் பேர்பெற்ற வெமைய றிந்த
நவநாத சித்தர்களு நயந்து கொள்வா
ரோதுலோ கங்களுடைத் துருவம் வேறு
யுளுற்றிமா தங்கமுஞ்சிந் தூரம தாக்கி
யேதொடரி தாரம்பொன் பூரம் வெள்ளி
யெனச்செய்வோம் வித்தையெலா மெளிதெ மக்கே.()

## இதுவுமது.

எளிதாய்ப்பன் மூலிகையி னியல்ப றிந்திங்
கிருப்பதன்றி மருதமகா லிங்கர் பொங்க
வெளிமுகத்தும் பாதரச மணியாக் காட்டி
மெய்ப்பித்த தாற்கொடிமேற் பறக்கக் கண்டோங்

தெளிவொடுமுற் பொருள்கள்பெற வராகி பூசை
செய்திடற்கு வரும்படிதாஞ் செப்ப லாமோ
குளகிருத பாயசமும் வேண்டோ மெந்தங்
குக்கிக்குச் சூழ்போதுங் குறைவி லோமே. (சஉ)

மேகவிடுதூது.

எழுசீர்க்கழிநெடிலடி
யாசிரியமுடுகுவிருத்தம்.

துறைவி லாதவர் மருத நாயகர்
குவடு நாடிய கொண்டல்கா
ணறைகு லாமுலை விழியி னீரது
நணுக வாடுமென் பெற்றியை
யிறைவ ஞரிட மொழிகு வீர்மயி
லினமு மாரவு வந்துதாஞ்
சிறையெ லாம்விரித் திலய மாடுதல்
செகம தேழும திந்ததே. (சங)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தேனூரு மலர்க்கொன்றைத் தாரணியு மருதீசர்
திருநாட் டின்கண்
வானூரு மகளிரென விளையாடு மெழிற்பெண்கண்
மையுண் கண்க
ளூனூரு முடம்புயிரை வாட்டுமிக வுறவுகொளற்
குற்று நோக்குந்
தானூருங் கயல்சாடுங் குழைதடவி மீளுமிடர்
தவிர்க்குந் தானே. (சச)

நாரைவிடுதூது.

கட்டளைக்கலித்துறை.

தந்திரங் கற்றெளிர் கண்மூடி மாமெய்த் தவத்தரென
முந்திரை நாடி மடைவாயிற் காக்கு முதுக்குருகீ
ரெந்தனம் புல்லு மருதூர்த் தலைவ ரிடத்தென்றுயர்
மந்தர மென்பிர் மறவேன் குருகையென் வண்கைகண்டே. ()

### வஞ்சிவிருத்தம்.

வல்லெ னும்முலை மாதரார்
சொல்லை நாடுறு தூர்த்தனே
னல்ல நீர்த்தெனை யாளுவா
யெல்லின் மெய்ம்மரு தீசனே. (சசு)

### ஊசல்.

### எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சஞ்சலஞ்சேர் பிறப்பிறப்பாஞ் சுழலி லாழ்ந்து
சதாதுன்ப முறுஞ்சீவர் தாப மாற
விஞ்சுறுபஞ் சாக்கரமாம் பலகை கூட்டி
விளங்குமன்பர் தோத்திரவொண் வடங்கள் பூட்டிச்
செஞ்செயவே தாகமமெய்ப் பீட மீதிற்
றிகழ்பெருமா முலைமாதோர் பாலின் மேவ
மஞ்சுறுநன் மருதிடத்தீ ராடி ரூசல்
மகாலிங்க நாயகரே யாடி ரூசல். (சஎ)

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஊசனிகர் பிறப்பிகந்த வரமுனிவ ரனுதினமு
முவந்து போற்று
மாசறுசீர் மதிகுலத்து வந்துதித்த வள்ளலெனும்
வரகு ணன்றன்
னேசமனை வியைக்கொணர்ந்து நீயொப்புக் கொள்ளெனவு
நிவர்த்தி யாம
லாசையொடும் விழுங்கியின்ப மனுபவித்த தென்மருதி
லமர்ந்து ளானே. (சஅ)

### மறம்.

### பன்னான்குசீர்க்
### கழிநெடிலடியாசிரிய முடுகுவிருத்தம்.

அச்ச மின்றி யெம்ம னைக்க ணண்மி யீந்து திருமுகத்
தாண்மை பேசிப் பெண்கொ டென்னு மரச தூத கேளடா

விச்சை மேவ மருத வாண ரிளைய பிள்ளை முருகவேட்
கின்ப மெய்து மெங்கு லப்பெ ணேற்று மணமு முற்றதா
லச்சு தன்வி ரிஞ்ச னுதி யமரர் டங்கு வாயினு
ரறிந்தி ருந்து மொன்று சேர்தற் காசை கொள்ள லாகுமோ
வுச்சி தங்கொ டேவ ரன்றி வேறெ வர்க்கும் பெண்கொடே
மொன்றி நின்று கெஞ்சி டாம லோடிப் போத னன்மையே.

நேரிசைவெண்பா.

நன்மதிசேர் நின்னன்பர் நண்ணுமிடஞ் சேர்ந்தன்னோர்
மென்மதிகேட் டுய்ய விரும்பினேன் - கன்மப்
பழியேற்ற நோயிடும்பை பண்ணுமென்செய் வேன்றாள்
விழியேற்ற தென்மருதா மேல். (ரு0)

இதுவுமது.

மேலமையுந் தென்பொதிகை மேவுங் கலயமுனி
யேலத் துதிக்கு மிடைமருதா - சால
விடப்பாம் பிறையணிந்த வித்தகநின் றாளாற்
கடப்பாம் பிறவிக் கடல். (ருக)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கடநாக முகத்திறையு நகத்திறையும் விளையாடக்
களிக்குங் கற்பார்
தடநாக மகளெனுஞ்சீர் வல்லிபடர் கற்பகப்பூந்
தருநீ காவென்
றிடநாக முறைபுலவ ரினிதிறைஞ்சு மிடைமருது
ரெந்தை யேபொற்
குடநாக மனையவர்தங் கூட்டுறவு தவிர்த்துவரங்
கொடுத்தாள் வாயே. (ருஉ)

வெறிவிலக்கல்.

கட்டளைக்கலித்துறை.

ஆமையி னேடொண் வராகத்தின் கோடு மகலூரத்திற்
றாமை யுறுதணி நம்மரு தீசர் தடங்கிரிவாய்

மாமையுன் கட்கொடி யாண்மய னேயிளை மாற்றுதற்கிங்
கூமையைக் கோறல் விதியுமுண் டோசொன்மி னுற்றவரே. ()

அம்மானை.

கட்டளைக்கலித்துறை.

வருஞாயிற் றைங்கர் மெய்திங்கள் போலும் வதனஞ்செவ்வாய்
விரிமறை யோங்கும் விரும்புதன் கையில் வியாழப்பணி
மருவும்வெள் ளிப்பொருப் பார்ந்தே டவ்வினை மாற்றசனி
பொருவப் புனிதர்க் கருண்மரு தாவென்பர் புங்கவரே. (ருச)

வலைச்சியார்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

புலைவீசு முணங்கன்மீ னுயிர்பெறச்செய் மருதீசர்
புனனுட் டின்கட்
கலைவீசு மறிஞருப மாணிக்கக் கெளிறுதிருக்
கையிற் காட்டி
நிலைவீசு வல்லவரும் பிரமைகொளச் சாலமிக
நிலவச் சேற்கண்
வலைவீசி மதன்மகரக் கொடிகொளச்செய் திறம்வலிது
வலைச்சி யாரே. (ருரு)

வண்டுவிடு தூது.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வளியான் மணங்கண் டுயர்தடங்கான்
மலைநற் பொதும்ப ரடர்ந்துநற்றே
னெளிதா வெளிதாச் சேர்த்தெவர்க்கு
மின்ப முறவே யளிப்பதனு
லளியா ரெனப்பேர் கொண்டவண்டீ
ரணங்குட் களிப்பப் பேர்சிறப்பத்
தளியார் மருதர்க் கோதில்வண்டார்
தருவார் வாங்கி வருவீரே. (ருசு)

## வஞ்சித்துறை.

வம்பவிழுந் தாரா
நம்புமரு தூரா
வெம்பவநீ திரா
யம்பிகைமேல் வாரா. (ருள)

## நேரிசைவெண்பா.

வானோ ரமுதுண்ண வல்விடநீ முன்னுண்ட
தேனோ மருதூ ரிறைவனே - ஞானோ
தயனே நிராமயனே சாரிமய மாது
வயவனு மாதே வனே. (ருஅ)

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தேமேவுந் தளவமணி செம்மலெம்ம லெண்டிருட்டி
திகழும் வேதன்
கோமேவுங் கொம்புறுகோ லங்கொம்பி லாக்கோலக்
கோலந் தாங்கிப்
பூமேவு மடிமுடிதே டிக்காணுப் பொருண்மருதூர்ப்
பொருளை யென்று
மாமேவு மலர்தூவிப் போற்றுவோர் பிறவிவினை
மாற்று வோரே. (ருகூ)

## இதுவுமது.

வாரணவொன் கங்கைமதிச் சடைமுடியு மதிமுகமும்
வளர்முக் கண்ணுந்
தாரணிநற் புயமுமணி கண்டமுமான் மழுக்கரமுஞ்
சலசத் தாளும்
பூரணிநன் முலைமாதம் பிகைபாக மும்பூதி
பொலிமெய் யுஞ்சி
ராரணமுந் தொழுமருதூர்ப் பெருமானி னருளடியேற்
களிப்பாய் நன்றே. (கூ0)

### நான்காரைச்சக்கிரபந்தம்.

### நேரிசைவெண்பா.

பாவாண ராதி பரபதிமே லாதேவ
தேவா மருதா திரசுருதி - மாவேறு
பாகாவென் றேதுறுபெண் பாகா பவளவரை
வாகாதே தாநீ வரம். (சுக)

### கிள்ளைவிடுதூது.

### கட்டளைக்கலித்துறை.

வற்றுப் பெருங்கரு ணைக்கட லாஞ்சீர் மனுமருதர்
சற்று இலுங்கினைத் தாரில்லை நீயென் றளர்யவர்பாற்
சொற்றுன் மிகவுஞ் சுகம்பெறு வேனினைத் தொல்லுலகிற்
கற்றுர் சுகமெனச் சொல்லுஞ் சொலுஞ்சுகங் காண்பிக்குமே.

### பிச்சியார்.

### எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பிச்சனென நீறிட்டுக் கபால சூலம்
பிடித்துக்கஞ் சுளிகாவி யுடைத ரித்து
மெய்ச்சுழுயர் செம்பணிநற் காதிற் பூண்டு
வியக்கவகந் தொறும்பதங்கை விடாம லேற்றுண்
டச்சுதனுந் துதிசெய்பரன் மருதூர் வீதி
யதனிடைநின் றந்தணரு மூளம யங்கி
யிச்சைகொள விழிமொழிகை காட்டி யாட
வென்பகர்தி ரெச்சச்சொற் பிச்சி யாரே. (சுரு)

### நேரிசைவெண்பா.

பிஞ்சு மதிச்சடிலப் பெம்மான் மருதேத்தார்
வெஞ்சரவர் நாவோ வெறிநாவே - கஞ்சன்மகிழ்
தெண்கவின்றைப் பூசத் திருவிழாக் காணுத
கண்களோ கூறுபழங் கண். (சுச)

சுழிகுளம்.

வஞ்சிவிருத்தம்.

பசுபதி யாமே காகா
சுதிவரு தேரா யோகா
பவமம ராவா ராமே
திருமரு தூரா தேயா. (சுரு)

நேரிசைவெண்பா.

தேயாத சீர்த்தித் திகழ்மருதி சன்பதத்தை
வாயார வாழ்த்தி வணங்குவோர்க் - கோயாப்
பவநோயுந் தீரும் பகர்கால னூர்செ
யவநோயுந் தீரு மறி. (சுசு)

உயிர்வருக்கமோனை.

நிலைமண்டில வாசிரியப்பா.

அருள்பொழி நயனத் தற்புத நாயக
ஆரணம் பராவு மகார வாச்சிய
இமயமா மகளுக் கிடந்தரும் வித்தக
ஈரிரு முகன்மாற் கெட்டாச் சோதிய
உவமையில் பொருண்முனிக் கோதிய நற்றவ
ஊனமொன் றறியா தொளிர்பரா னந்த
எண்டிசை யோர்நித மேத்துந் தயாபர
ஏகநா யகனெனு மிடைமரு தீச
ஐயா னனம்பெறு மானந்த மூர்த்தி
ஒப்புயர் வில்லா தோங்கும் பரம
ஓரா யிரமுகத் தொருநதி வேணிய
ஔவிய மகற்றியா ளெனவறை மனனே. (சுஎ)

மடக்கு.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மஞ்சரி மார்பானும் விஞ்சரி சார்பானு
மாரனை வென்றானு மோரனை யின்றானு

நஞ்சம தண்டானும் வஞ்சம தண்டானு
நாரியி டத்தானு மூரிவ டத்தானு
மிஞ்சியெ ரித்தானு முஞ்சித ரித்தானு
மெண்ணுறு தோளானுங் கண்ணுறு தாளானுங்
கஞ்சுகி பூண்டானு மஞ்சுகி யாண்டானுங்
கருதவ னத்தானு மருதவ னத்தானே. (சுஅ)

## குயில்விடுதூது.

### நேரிசைவெண்பா.

வசந்தனுக்கோ ரெக்காள வாத்தியமா ஞயவ்
வசந்தனு லென்னபயன் வாய்ந்தாய் - வசந்தக்
குயிலே மருதிறையைக் கூடச்செய் வாயே
னயனுடைமா நட்பென்பே னுன். (சுகூ)

## தூது.

### கட்டளைக்கலித்துறை.

நானங் கமழு முலைமட வாய்நெடு ஞாலமுண்ட
கோனங் களித்த குமாரன்கை யம்பொண் குடைமுரசந்
தானங் குறிக்கு மொருதேர் செயுந்துயர் தாங்ககிலேன்
வானங் களிக்கு மருதூ ரரைநீ வரச்செய்வையே. (எo)

## தென்றற்றூது.

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

செய்யதமிழ் முனிவசிக்கும் வரைக்கணுதித் தொளிருமிளந்
தென்ற லேயென்
மையலறிந் தும்பணப்பை மெய்யிலணி மருதரினும்
வந்தா ரில்லை
யையமச்ச மகன்றுசமு கத்தநின்றி யானுறும்பா
டனைத்துங் கூறி
யுய்யும்வித மவரைவரச் செய்யினிசை யெண்டிசையு
மோங்கு மாதோ. (எக)

## வினாவுத்தரம்.

### நேரிசைவெண்பா.

மாமலர்க்கட் டோற்றுவதும் வாண்மரக்கி ழோவேது
மேமனுக்கோ ரேம னிருக்கையதும் - பூமன்
விருதாத் தொடுப்பதுவு மேலெண் ணுவது
மருதூர்க் கலம்பகமம் மா. (எஉ)

## கிளிப்பயிற்று.

### ஓரோவோரடிமிக்குவேறுபடவந்த கொச்சகவொருபோகு.

அந்தணர்தம் பிறப்பேய்ந்த வவிர்தீஞ்சொற் பைங்கிளியே
தந்திரவெண் கொக்கிறகு தனைவனைந்த சடிலரெனச்
சிந்தனைசெய் கருங்காக்கை செனனமறப் பேறளித்த
வெந்தைமகா லிங்கர்புக ழின்புறநீ கூறுதியா
லிடைமருத வாணர்புக ழின்புறநீ கூறுதியால். (எ௩)

## கண்டுகைசோர்தல்.

### நேரிசைவெண்பா.

கூர்வேற்க ணீர்சொரியுங் கோலவளை கையகலு
மார்கன் னுதல்வே ரரும்புமாற் - சீரெனவுட்
டேர்ந்தடிபூக் கும்மருதத் தின்கற் பகத்தைமகிழ்
கூர்ந்தனையா நற்பைங் கொடிக்கு. (எசு)

## கிளவிவேட்டல்.

### கட்டளைக்கலித்துறை.

நன்னிலை யீந்திடுந் தென்மத்தி யார்ச்சுனர் நாடதனிற்
பன்னுமின் கூந்தன் முகம்விழி கொங்கை பரிந்தவிடை
மன்னற லோமதி யோகனை யோமலை யோதுடியோ
புன்னகை தோன்ற மலர்வா யலர்ந்தருள் பூவைமின்னே. (எரு)

மடக்கு.

கட்டளைக்கலிப்பா.

பூவை வண்ணர்க் களித்தது சங்கமே
புலவர் வேண்டக் களித்தது சங்கமே
மேவு மெய்யி லொருசிவை பாகமே
விரும்பிக் கோடலு நல்லவிப் பாகமே
தாவில் கையய னூரக்க பாலமே
சண்மு கற்கனை யாரக்க பாலமே
தேவ னூர்சொன் மருத நகரமே
செய்ய வாழ்வு மருத நகரமே. (எசு)

நாணிக்கண்புதைத்தல்.

கட்டளைக்கலித்துறை.

நகைத்துப் புரஞ்செற்ற வல்லவெண் மூரலர் நற்பொதிய
வகத்திய ரேத்து மருதிசர் நாட்டுறை யாரணங்கே
சுகத்தபொன் வண்ணச் சுவர்க்க முறுதிறை சூழ்பதின்மர்
மிகுத்தரி வைகுந்த நண்ணனன் றேவிதி மெய்ப்பிப்பையே. ()

பாண்.

பன்னுன்குசீர்க்

கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

விதியிலா திருசா ணபசுரக் கட்டை
வீணையொன் றகங்கையிற் றூங்கி
வினவுதற் கொவ்வா விடிகுரற் காட்டும்
வீணனும் பாணனே கேண்மோ
மதியிலான் செயுமோர் வாணியம் போலு
மகிழ்ந்திது கொண்டனை மிக்க
மங்கின மடைவ தன்றிமெய்ச் சுவரார்
வாரிசூழ் வையக மதனிற்

கதியிலார் தமக்குங் கதிநிலை காட்டுங்
கருத்தனு மருதவா ணன்றன்
கழலிணை யிறைஞ்சின் மகதியாழ் மருவுங்
கருதிசைக் குரலுமே லாகுங்
கொதியிலா நயச்சீர் பெற்றநா ரதப்பேர்
கூறியா வருநனி மதிப்பர்
கொஞ்சமு மையங் கொள்ளவே வேண்டாங்
குதூகலம் பரவவாழ் குவையே. (எஅ)

கைக்கிளை.

கொச்சகக்கலிப்பா.

தீங்குமஞ்சேர் மென்முலையைக் கூர்விழியை வார்குழலைச்
செங்கமல வாயையெணித் தியங்குமெனை விரும்புகிலாய்
கொங்கலரை யம்புடையான் கொடுங்கோளைப்போர் புரிகின்று
ளிங்கெனநான் செய்கிற்பே னிடைமருதத் தேர்மாதே. (எகூ)

வஞ்சித்துறை.

மாதரு மாதனமும்
பூதரு மாநிலமு
நீதரு மாறுரையாய்
மாதரு மாமருதா. (அ0)

தூ ர வ.

அறுசீர்க்

கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

மாலம ரினியமென் மொழிகளும்
வாளினை மானுமொண் விழிகளுங்
கோலச ரோருக முலைகளுங்
கொண்டு விளங்குயர் கொள்கையீர்

தால மகிழ்ந்திட வருள்செயுந்
தண்மரு தூருறை நாதனார்
சீல மிகும்புகழ் பாடியே
திகழுங் குரவைக ளாடிரோ. (அக)

## இதுவுமது.

## அடிநான்காய்த்தம்முளொத்துவந்த இரட்டைக்குறள்வெண்செந்துறை.

தலமாரும் வழுதியின் மனையாளை யுடன்கொண்ட
குருவேத வாய்பாடிக் குரவையிடு
குணமேவு மொருநால்வர் திருவாக்கி னிசைகேட்ட
குழைசேரொண் செவிபாடிக் குரவையிடு
வனீடு முனிவோர்க ளுளவாச மகலாத
மருதீசர் கழல்பாடிக் குரவையிடு
மதியோர்சொ லணிமேவு மடவீர்கைம் மலர்கோத்து
மகிமீது மகிழ்நீடிக் குரவையிடு. (அஉ)

## இதுவுமது.

## பன்னான்குசீர்க்

## கழிநெடிலடியாசிரியமுடுகுவிருத்தம்.

மதிலு டுத்திசைகொண் மருது பொற்பதியும்
வளமு றக்குரவை யிடுமினோ
மதக யத்தின்முக மருவு மத்தர்துதி
வலுவெ னக்குரவை யிடுமினோ
சுதிவ ளர்த்தமொழி நலமு லைப்பரமி
சுபமெ னக்குரவை யிடுமினோ
சுடர்செய் முக்கணுறு மருத மெய்ப்பரமர்
துணையெ னக்குரவை யிடுமினோ
பதியு ணர்த்துமுயர் தமிழ்ம றைத்தொகுதி
படியெ னக்குரவை யிடுமினோ

பகர்பி றப்பகலும் விதமு ருத்ரமணி
பணியெ னக்குரவை யிடுமினோ
நதிம கத்துவம திலகு காவிரியொ
ணூட்டி னைப்புகழ வேட்டுறு
நங்கை மீர்மருவு கொங்கை யீர்நளின
நயமி னீர்குரவை யிடுமினோ. (௮௩)

## சல்லாபம்.

### எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இடமைய மேற்கவொண் கபாலங் கையி
லேந்திமகா லிங்கர்வந்தார் கடைவா யிற்சென்
றடிமைக்க ணோக்கவெதிர் சென்றே யோர்கை
யமுதங்கொ ளென்றேன்வா யமுத நீதா
மடவாயென் றூர்விகடம் பேச வும்வாய்
வல்லரென்றேன் விகடமம்ம நின்மார் பென்று
ரிடைமருத ரோவென்றேன் மௌன மாணு
ரேடியிதென் னடிசேடி யியம்பல் வேண்டும். (௮௪)

## காலம்.

### எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வேதவே தாகமங்க டழைக்குங் காலம்
விளம்புறுசித் தாந்தவொளி வீசுங் கால
நீதசிவ யோகியர்வந் திலகுங் கால
நித்தியநை மித்திகங்க ணிகழுங் கால
மோதரிய முத்தியையு ளுணருங் கால
முவந்தன்பர் மெய்ப்பத்தி யோங்குங் கால
மாதவர்சொன் மருதூர்யா மருவுங் கால
மகாலிங்க நாதரருள் வழங்குங் காலம். (௮௫)

## ஆற்றிடைமுக்கோற்பகவரைவினாதல்.

### கட்டளைக்கலித்துறை.

காலமுக் கோற்கொண் டொழுகுமெய்ம் மாதவக் காதலுள்ளீர்
சீலமிக் காரு மிடைமரு தூர்வயச் செம்மலின்பின்
பாலினு மின்மொழி யோர்மட மான்வரப் பார்த்ததுண்டோ
தாலந் தனிலருள் செய்வீரெ முள்ளந் தழைத்திடவே. (அ௬)

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தடைக்கொடி தில்லார் போலுந் தடமலை வில்லார் போலுங்
கடைக்கொடி காத்தார் போலுங் கைதையைச் சாத்தார்போலும்
விடைக்கொடி தரித்தார் போலும் விறலிப முரித்தார் போலு
மிடைக்கொடி யணைத்தார் போலு மெழின்மகா லிங்கர்போலும்.

### ஈரடியாயொருபொருண்மேன்மூன்றடுக்கி ஈற்றடிமிக்குவந்த கலித்தாழிசை.

மங்கு றவழ்பொதும்பர் மல்கு மிடைமருதூர்ப்
புங்கவர் சிகாமணியைப் புகழ்மினோ
வம்மின் புலவீர்காள்
மையாரும் வேற்கணுமை மாதுவக்கு மொண்மருதூர்ப்
பொய்யா மணிவிளக்கைப் புகழ்மினோ
வம்மின் புலவீர்காள்
ஆதார மாகி யனைத்துமரு ளன்மருதூர்ப்
பூதாதி நாயகனைப் புகழ்மினோ
வம்மின் புலவீர்காள். (அஅ)

### கி ரை ய ா ர்.

### எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வளங்கொளமெய் யடியாரைக் காசி னிக்கண்
மறவாம லாள்புனிதர் வள்ளைக் காதர்
விளங்குபண்ணை யிடைமருதூர் யேலை மாட
வீதியிட மடகுவிற்கு மென்சொ னல்லா

யுளங்கவரு முன்னைவிரும் பிடவிவ் வேளை
யோதனத்திற் காம்பசலை யுளது கைக்கொள்
குளங்கண்டும் வெறுக்குமின்ப மேவு மென்றாய்
கொஞ்சமுந்தான் கையாதோ கூறு வாயே. (அகூ)

## கட்டளைக்கலித்துறை.

வாழும் படிநல் வரமெமக் கீயு மருதவல்ல
வாழியுஞ் சங்கமு மப்புரு டோத்தமற் கன்றளித்தின்
றேழிசை மென்மொழிப் பெண்ணு மிவள்செங்கை யிட்டிருந்த
வாழியுஞ் சங்கமு நீவாங்கிக் கொள்ள லழகதன்றே. (கூ0)

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அருச்சுனமா சுணங்கங்கை யாரிதழி செஞ்சடிலத்
தணிந்த மத்தி
யருச்சுனமா தேவவெனப் பன்மலர்கொண் டருச்சனைசெய்
தருள்பெ றும
லருச்சுனம்பெண் டரையின்மீ தவாவோங்கி மிகவுமுளத்
தழுங்கு கின்றே
னருச்சுனற்குப் பாசுபத மளித்தாண்ட சங்கரனே
யனக தேவே. (கூக)

## நேரிசைவெண்பா.

தேடரிய மூர்த்தி திரமகா லிங்கரென்று
நாடுமென துள்ளத்தே நண்ணியதா - னீடுதினங்
கண்டுளபன் னேய்காள் கரந்திரா தோடுங்க
டண்டுளபன் கஞ்சா தனன். (கூஉ)

## முன்பனிக்காலம்.

## அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

தனத்திச்சை கொண்டுசென்ற மன்னரினும் வரக்காணேன்
சதிக்கா மன்விற்

குனித்துவிடும் வெஞ்சரத்தா னேர்ந்தபுண்க ளளவிலவிக்
கொங்கை யானை
யினைத்தினங்க ணீர்குளிக்கச் செயும்பனிக்கா லமும்வந்த
தென்செய் கோயான்
மனத்தின்மரு தூர்ப்பூச விழாவுமெண்ணி னரிலையோ
மலர்க்க ணாளே. (௩௩)

## பூவைவிடுதூது.

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மலர்க்கண்ண னயனமரர் தொழுதிறைஞ்சு முக்கணரன்
மருதூர் நாட்டின்
மலர்க்கண்ணன் மேனிவண்ணப் பூவைவண்ணப் பூவையிசை
வாய்ப்புள் ளேயம்
மலர்க்கண்ணன் றூதுசென்ற தறியாயோ வன்பர்தம்பான்
மயலைச் சொல்லி
மலர்க்கண்ணன் திருவெனவே சுகம்பெறச்செ யென்னாளு
மறந்திடோமே. (௩௪)

## சந்திரோபாலம்பனம்.

### நேரிசைவெண்பா.

மறச்சுமதி வெண்மதியே வண்மருதீ சன்றாள்
சிறக்க வுடன்முனைநீ தேய்ந்தாய் - வறக்குமனற்
கொட்டிக்கா யன்மதனன் கூட்டுறவோ மாதுபழி
விட்டிடா மேயொறுக்கு மெய். (௩௫)

## நற்றயிரங்கல்.

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மெய்யுறு வேத வேதியர் மேரு
வில்லினர் வெள்ளியங் கிரியர்
கையினிற் பணப்பை யுள்ளவர் மருதக்
கடிநகர்க் கடவுளென் றடங்கா

மையனீ கொள்ள லடுக்குமோ மகளே
வத்திர மரையிலார் மெய்யிற்
றையலார் பலிச்சென் றுழன்றுநஞ் சுண்ட
தனியனு ரெனத்தகுந் தகுமே. (௯௬)

கார்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தகுந்தவிதஞ் சொல்லியெனைப் பிரிந்த மெய்யர்
தாமிந்தப் பாவியெந்த விதமா னுளென்
றகந்தன்னி னினைத்திருந்தான் மழைக்கா லம்வந்
தடுத்ததற்கு வராமலிரா ரென்போ லோர்பெண்
சுகந்தனைக்கொண் டிவிடமறந் தனரோ வென்றன்
துயரையுரைத் தழைத்துவந்து சேர்ப்பா ரார்கார்
முகந்துவா டையும்வீசு மாற்ற இல்லேன்
முதல்வர்மரு தூர்மதிநன் முகத்தி னுளே. (௯௭)

நேரிசைவெண்பா.

முதல்வனுர் மூவா முதல்வனுர் யார்க்கு
முதல்வனுர் தென்மருதூர் மூர்த்தி - யெதனுற்
பிறப்பிறப் பில்லாப் பிரானுதல் பற்றி
யுறப்பா ருரைப்பதுமா னும். (௯௮)

கட்டளைக்கலித்துறை.

மானும் கனன்மழு வுங்கரத் தேந்தி வணப்பவள
மானுந் திருவுரு வத்தோர் புறத்தொன் வரைபயந்த
மானுஞ் சடைக்கணோர் மானும்வைத் தோங்கு மருதப்பெரு
மானும்பர் போற்றும் பதகஞ்ச மென்னுள் வரக்கண்டெனே.()

நேரிசைவெண்பா.

கண்டார்க்கஞ் ஞானங் கடிதோட்டு முன்மதிப்புக்
கொண்டார்க் கதீதசிலை கூட்டிடுமே - தண்டாம்
விருத வனமா மணிகண்டா வென்னு
மருத வனமா மணி, (௧00)

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மணியாரு முறுவலுமைப் பாலுண்ட கௌணியர்தம்
　　வரமெய்ஞ் ஞான
மணியாழி யினைச்சிலையாற் கடந்தவா கீசமணி
　　வளர்சீர் நம்பி
மணியாணர் மணிவாக்கு மணிநால்வர்க் கருளுமிடை
　　மருத வாண
மணியாகு மகாலிங்கர் மணித்தாளென் முடிக்கணியு
　　மணிப்பூ வாமே. (கOக)

## திருவிடைமருதூர்க்கலம்பகம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.



# கலம்பகப்பாட்டியல்.

வைக்கும் புயந்தவம்வண் டம்மனை பாண்மதங்கு
கைக்கிளைசித் தூசல் களிமடக்கூர் - மிக்கமறங்
காலந் தழையிரங்கல் சம்பிரதங் கார்தூது
கோலுங் கலம்பகத்தின் கூறு,

— வச்சணந்திமாலை, செய்யுளியல். ௪0.

---

ஒருபோகு வெண்பாக் கலித்துறை யுறமுன்
வருபுய மதங்கம் மானை காலஞ்
சம்பிர தங்கார் தவங்குற மறம்பாண்
களிசித் திரங்கல் கைக்கிளை தூது
வண்டு தழைமேற் கொண்டெழு மூசன்
மடக்கு மருட்பா வஞ்சி விருத்த
மகவல் கலியின மகவல் விருத்தம்
வஞ்சிவஞ் சித்துறை வெண்டுறை மருவி
யிடையிடை வெண்பாக் கலித்துறை நடைபெற்
றந்தாதி மண்டலித் தாங்கலம் பகமே.

— இலக்கணவிளக்கம். பாட்டியல். ருஉ.



# இக்கலம்பக வுறுப்பகராதி.


| | | பக்கம். | பா. |
|---|---|---|---|
| 1. | அம்மானை | கசு. | கஎ. |
| 2. | அரதனமாலை | உசு. | ருச. |
| 3. | அன்னவிடுதூது | கரு. | கச. |
| 4. | ஆற்றிடைமுக்கோற் பகவரை வினாதல் | ௩ச. | அசு. |
| 5. | இடைச்சியார் | உஉ. | ச௦. |
| 6. | உயிர்வருக்கமோனை | உகூ. | சுஎ. |
| 7. | ஊசல் | உச. | சஎ. |
| 8. | ஊர் - சிலேடை | உ௦. | ௩௩. |
| 9. | ஐயந்தெளிதல் | ககூ. | உஅ. |
| 10. | கண்டுகைசோர்தல் | ௩க. | எச. |
| 11. | களி | கஎ, | உக, உஉ. |
| 12. | கார் | ௩கூ. | கூஎ. |
| 13. | காலம் | ௩ரு. | அரு. |
| 14. | கிளவிவேட்டல் | ௩க. | எரு. |
| 15. | கிளிப்பயிற்று | ௩க. | எ௩. |
| 16. | கிள்ளைவிடுதூது | உஅ. | சுஉ. |
| 17. | கீரையார் | ௩சு. | அகூ. |
| 18. | குயில்விடுதூது | ௩௦. | சுகூ. |
| 19. | குரவை | ௩௩. | அக, அஉ, அ௩, |
| 20. | குறம் | உக. | ௩அ. |
| 21. | கைக்கிளை | ௩௩. | எகூ. |
| 22. | சந்திரோபாலம்பனம் | ௩அ. | கூரு. |
| 23. | சம்பிரதம் | ககூ. | ௩௦. |
| 24. | சல்லாபம் | ௩ரு. | அச. |
| 25. | சித்து | உஉ. | சக, உச. |

| | | |
|---|---|---|
| 26. சுழிகுளம் ... | ...௨௯. | ௬௫. |
| 27. தலைவிபுள்ளொடுகிளத்தல் | ... ௧௮. | ௨௬. |
| 28. தவம் ... ... | ... ௧௮. | ௨௫. |
| 29. தழை ... ... | ... ௨௧. | ௩௫. |
| 30. தூது ... ... | ... ௩0. | ௭0. |
| 31. தென்றற்றூது ... | ... ௩0. | ௭௧. |
| 32. நற்றாயிரங்கல் ... | ... ௩௮. | ௯௬. |
| 33. நாணிக்கண்புதைத்தல் | ... ௩௨. | ௭௭. |
| 34. நாரைவிடுதூது ... | .. ௧௪, ௨௩. | ௮, ௪௫. |
| 35. நான்காரைச் சக்கரபந்தம் | ... ௨௮. | ௬௧. |
| 36. நெஞ்சுவிடுதூது ... | ... ௧௪. | ௧௧. |
| 37. பள் ... ... | ... ௧௬. | ௧௯. |
| 38. பாண் ... ... | ... ௩௨. | ௭௮. |
| 39. பிச்சியார் ... | ... ௨௮. | ௬௩. |
| 40. புயவகுப்பு ... | ... ௧௨. | ௪. |
| 41. பூவைவிடுதூது ... | ... ௩௮. | ௯௪. |
| 42. மடக்கு ... ... | ... ௨௯, ௩௨. | ௬௮, ௭௬. |
| 43. மதங்கியார் .. | ... ௧௮. | ௨௪. |
| 44. மறம் ... ... | ... ௨௪. | ௪௯. |
| 45. முன்பனிக்காலம் ... | ... ௩௭. | ௯௩. |
| 46. மேகவிடுதூது ... | ... ௨௩. | ௪௩. |
| 47. வண்டுவிடுதூது ... | ... ௨௬. | ௫௬. |
| 48. வலைச்சியார் ... | ... ௨௬. | ௫௫. |
| 49. வினவுத்தரம் ... | ... ௧௯, ௩௧. | ௨௯, ௭௨. |
| 50. வெறிவிலக்கல் ... | ... ௨௫. | ௫௩. |




# செய்யுண்முதற்குறிப்பகராதி.


| | பக்கம். |
|---|---|
| அச்சமின்றி | உச |
| அடைவுபெறுங் | கஅ |
| அந்தணர்தம் | ௩க |
| அருச்சுனமா | ௩எ |
| அருள்பொழி | உகூ |
| ஆடச்செய் | கரு |
| ஆமையினோ | உரு |
| இசைநேர்தவ | க௩ |
| இடுமைய | ௩ரு |
| இயலாதி | கரு |
| உண்மைஞா | உ0 |
| ஊசனிகர் | உச |
| எளிதாய்ப்பன் | உஉ |
| ஒங்களிய | கஎ |
| ஓதொரிந்து | கசூ |
| கஞ்சமுக | உ0 |
| கடநாக | உரு |
| கண்டார்க்கஞ் | ௩கூ |
| காட்டுமால் | ககூ |
| காணுமன் | ககூ |
| காலமுக் | ௩சூ |
| குங்குமஞ்ச | ௩௩ |
| குலமாரு | ௩ச |
| குறைவிலா | உ௩ |
| கூர்வேற்க | ௩க |
| கோண்டலெனக் | கச |
| கோபால | கச |
| சஞ்சலஞ்சேர் | உச |
| சரதமதமை | கஉ |
| சீராரிடை | எ |
| சீருறுநாற் | கக |
| சும்மாவி | கரு |
| செய்யதமிழ் | ௩0 |
| தகுந்தவிதஞ் | ௩கூ |
| தடைக்கொடி | ௩சூ |
| தந்திரங் | உ௩ |
| தவத்தினர் | கக |
| தனத்திச்சை | ௩எ |
| தாங்குநெடுங் | கஎ |
| தானமத | கஎ |
| தீக்கயமு | கஅ |
| தேடரிய | ௩எ |
| தேமேவுங் | உஎ |
| தேயாத | உகூ |
| தேவர்க | கச |
| தேனுரு | உ௩ |
| நகைத்துப்பு | ௩உ |
| நன்மதிசேர் | உரு |
| நன்னிலையீங் | ௩க |
| நானங்கம | ௩0 |
| பசுபதி | உகூ |
| படிப்பாலு | உஉ |
| பள்ளக்கரும் | கஎ |
| பாலொடு | கரு |
| பாவாண | உஅ |
| பிச்சனெ | உஅ |
| பிஞ்சுமதிச் | உஅ |
| பிரியமுடன் | உக |
| பின்னிடாது | உ0 |
| புகல்விடம | அ |
| புயங்கமுனி | க௩ |
| புலைவீசு | உசூ |
| பூமேவு | கூ |
| பூவைவண் | ௩உ |

| | பக்கம். | | பக்கம். |
|---|---|---|---|
| பெண்ணிடத்தன் | எ | மேதகுநன் | உஉ |
| மங்குறவழ் மையாரு ஆதார | ௩சு | மேலமையுந் | உரு |
| | | வசந்தனுக்கோ | ௩0 |
| | | வண்ணவொண் | கக |
| மஞ்சரிமார் | உக | வம்பவிழுங் | உஎ |
| மடமைசெறி | கசு | வருஞாயிற் | உசு |
| மணிக்கோவை | அ | வல்லெனு | உசு |
| மணியாரு | ௪0 | வளங்குலவு | க௩ |
| மதிலுடுத் | ௩சு | வளங்கொளமெய் | ௩சு |
| மலயமுனிக் | உக | வளியான்மணங் | உசு |
| மலர்க்கண்ண | ௩அ | வற்றுப்பெ | உஅ |
| மறக்குமதி | ௩அ | வனதடா | உக |
| மாதருமா | ௩௩ | வாயுதித்த | கரு |
| மாதர்முலை | கக | வாரணவொண் | உஎ |
| மாமலர்க்கட் | ௩க | வாழும்படி | ௩எ |
| மாலமரி | ௩௩ | வாழ்த்துமின் | உ0 |
| மாற்றுயர்ந்த | உக | வானோரமு | உஎ |
| மானுக்கிடங் | கசு | விண்கொண்ட | கசு |
| மானுங்கனன் | ௩க | விதியிலா | ௩உ |
| மின்னுமுடி | உக | வீரமுறும் | கஅ |
| முதல்வனர் | ௩க | வேதவே | ௩ரு |
| மெய்யுறவே | ௩அ | | |